# பாரதி உரைநடை : பதிப்பு வரலாறு

முனைவர் (பிஎச்.டி) பட்டப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**மி. அகஸ்டின் ஜார்ஜ் செல்லம்மாள்**
அண்ணா பொதுவாழ்வியல் மையம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை– 600 005




**அண்ணா பொதுவாழ்வியல் மையம்**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

**நவம்பர் – 2006**

# முன்னுரை

கவிதையிலும் உரைநடையிலும் பரீட்சார்த்த முறைகளின் முன்னோடியாக இருந்தவர் சுப்பிரமணிய பாரதியார். சுதந்திரப் போராட்டத்தில் சென்னையின் பங்களிப்பு, சமூக அரசியல் விழிப்புணர்வு, கல்வி போன்ற பல துறைகளின் வளர்ச்சியோடும் வரலாற்றோடும் இணைந்தது பாரதியின் வாழ்க்கை வரலாறு. 1882 டிசம்பர் 11ஆம் நாள் எட்டயபுரத்தில் நடுத்தர பிராமணக் குடும்பத்தில் பிறந்து, 1921இல் 39வயது பூர்த்தியாவதற்குள் இவ்வுலக வாழ்வை முடித்துக்கொண்டார். 1904ஆம் ஆண்டு 'விவேகபாநு' இதழில் பாரதியின் முதல் பாடல் வெளியாகியது.

1904இலிருந்து 1921இல் தாம் மறைவது வரை தொடர்ச்சியான எழுத்துப் பணியை மேற்கொண்டிருந்தார் மகாகவி பாரதியார். 1904ஆம் ஆண்டு 'சுதேசமித்திரன்' இதழில் உதவி ஆசிரியராகப் பணியாற்றத் தொடங்கியதிலிருந்தே அவரது உரைநடை எழுத்துப்பணி தொடங்குகிறது. சுதேசமித்திரனில் பணியாற்றிக் கொண்டிருக்கும்போதே பெண்களுக்காக நடத்தப்பட்ட 'சக்ரவர்த்தினி' என்னும் இதழின் ஆசிரியர் பொறுப்பையும் ஏற்றார். 1906ஆம் ஆண்டின் இறுதியில் 'இந்தியா' இதழில் பணியேற்றார். இதிலிருந்தே அவரது தீவிர அரசியல் பணி தொடங்கியது.

1905ஆம் ஆண்டு முதல் நிகழ்ந்த சமூக, அரசியல் பிரச்சனைகள் பலவற்றையும் பாரதியின் கட்டுரைகளில் காண முடிகிறது. தம் எழுத்துக்கள் மூலம் மக்களிடையே சுதேசிய உணர்வை ஊட்ட தீவிரமாக உழைத்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அடக்கு முறையால், அதன் ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதிக்குள் இருந்துகொண்டு பத்திரிகைகள் சுதந்திரமாகச் செயல்பட முடியாத நிலையில் பாரதி 1909இல் புதுச்சேரியைச் சென்றடைந்தார்.

1907 ஆம் ஆண்டு சூரத் மாநாட்டில் காங்கிரஸ் இரண்டு கட்சிகளாகப் பிளவுண்டது. தீவிரவாதிகளின் அணியில் இருந்த பாரதி, சூரத்திலிருந்து சென்னை திரும்பிய பின் மிகத் தீவிரமாக சுதேசி இயக்கச் செயல்பாடுகளில் பங்கு கொண்டார்.

## பாரதி நூல் பதிப்புகள்

1904 முதல் தொடர்ச்சியாக பத்திரிகைகளில் எழுதி வந்துள்ளார். கட்டுரை, பாடல், கதை, சிறு துணுக்கு, ஆசிரியர் குறிப்பு எனப் பல வடிவங்களில் பாரதியின் எழுத்துக்களை அவர் பணியாற்றிய இதழ்களில் காணமுடிகிறது. இவை தவிர பத்திரிகைகளில் வெளியிடாமல் நூலாக வெளியிட வேண்டுமென்ற எண்ணத்திலும் பாரதி தமது படைப்பாக்கங்களைக் கொண்டிருந்தார். 'தமிழ் வளர்ப்புப் பண்ணை' என்ற அமைப்பை நிறுவி நூல்களை வெளியிட திட்டம் தீட்டியிருந்தார். பத்திரிகைகளில் அது தொடர்பான செயல்திட்டங்களை விரிவாக வெளியிட்டு ஆதரவு தேடினார். ஆனால் அம்முயற்சிகள் எவையும் வெற்றிபெறவில்லை. பாரதி வாழ்ந்த காலத்தில் வெளிவந்துள்ள உரைநடை நூல்கள் மொத்தம் 12 மட்டுமே. பிற நூல்கள் அனைத்தும் அவரது மறைவுக்குப் பின்னரே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

## உரைநடைப் படைப்புகள்

பாரதி தாமே முயன்றும், நண்பர்களின் உதவியோடும் வெளியிட்ட 20 நூல்களுள் 12 நூல்கள் உரைநடை நூல்கள். பாரதி ஒரு கவிஞராகவே பெரும்பான்மையோரால் இன்றுவரை அடையாளம் காணப்படுகிறார். ஏனெனில் நூலாக வெளிவந்த பாரதியின் படைப்புகள் மிகச்சிலவே. அவரது உரைநடைப் படைப்பாக்கங்கள் பெரும்பாலும் பத்திரிகைகளிலேயே

எழுதப்பட்டன. பாரதி வாழ்ந்த காலத்தில் இவை அனைத்தும் நூலாக்கம் பெறவில்லை.

1907ஆம் ஆண்டில் திலகர் தன்னுடைய புதிய கட்சிக் கொள்கைகளை விளக்கி ஆற்றிய, 'The Tenets of the New Party' என்னும் ஆங்கிலச் சொற்பொழிவை, 'புதிய கட்சியின் கொள்கைகள்' என்று தமிழ்ப்படுத்தி நூலாக வெளியிட்டார்.

கல்கத்தா காங்கிரஸில் மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாடு 1907ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் சூரத்தில் நிகழ்ந்த காங்கிரஸ் கூட்டத்தில் வலுவடைந்து பெரும் குழப்பத்தில் முடிந்தது. இம்மாநாட்டிற்குச் சென்று இவற்றையெல்லாம் நேரில் கண்ட பாரதியார், அங்கிருந்து திரும்பி வந்தபிறகு 'எங்கள் காங்கிரஸ் யாத்திரை' என்ற கட்டுரை ஒன்றை எழுதி அதை ஒரு சிறு பிரசுரமாக 1908 இல் வெளியிட்டார்.

'ஞானரதம்' என்ற புதினம் போன்ற இலக்கியத் தொடர் 'இந்தியா' இதழில் தொடராக வெளிவந்து பின்னர் 1910ஆம் ஆண்டில் புத்தகமாக வெளிவந்தது. தொடர்ந்து 1910ஆகஸ்டில் 'ஆறிலொரு பங்கு' என்னும் நூல் வெளிவந்தது. அரசியல் கலப்பில்லாத இந்நூல் 1911ஆம் ஆண்டில் தடை செய்யப்பட்டது. 1914இல் 'The Fox with the Golden Tail' என்ற ஆங்கில நூல் வெளிவந்துள்ளது. இந்நூல் அன்னிபெசண்ட் அம்மையாரின் அரசியலையும் அவர், ஜே. கிருஷ்ணமூர்த்தி, அவரது சகோதரர் ஜே. நித்யானந்தன் ஆகியோரை வளர்த்தது பற்றியும் வரையப்பட்ட கேலிச் சித்திரம்.

இதன்பிறகு 1918இல் தாகூர் எழுதிய கட்டுரைகளை 'மகாகவி ஸர் ரவீந்திரநாத் தாகூர் அருளிய பஞ்ச வியாஸங்கள்' என்னும் பெயரில் பாரதி, தமிழில் மொழிபெயர்த்தார். இந்நூலை சுதேசமித்திரன் புத்தகசாலை வெளியிட்டது. இவ்வாண்டிலேயே வெளிவந்த மற்றொரு நூல் 'ஜீவவாக்கு'. இந்நூல் இந்திய விஞ்ஞானியாகிய ஸர் ஜகதீச சந்திரவஸு என்பார் தம்முடைய விஞ்ஞானக் கூடத்தைத் திறந்துவைத்து ஆற்றிய உரையின் தமிழாக்கம் ஆகும்.

1919இல் புதுச்சேரி, இந்திய பதிப்புச்சாலை, ரவீந்திரநாத் தாகூரின் சிறுகதைகளை இரண்டு தொகுதியாக வெளியிட்டது. இத்தொகுதிகளில் பாரதி மொழிபெயர்த்த எட்டு சிறுகதைள் இடம்பெற்றுள்ளன.

தொடர்ந்து சுதேசமித்திரன் புத்தகசாலை மேலும் 3 நூல்களை வெளியிட்டது. 1919ஆம் ஆண்டு 'பாரத ஜனசபை' என்ற மொழிபெயர்ப்பு நூலின் முதல் பாகமும், 1920இல் இதன் இரண்டாம் பாகமும் வெளிவந்தன. தொடர்ந்து, 'கதாமாலிகா' என்ற கதைகளும் கட்டுரைகளும் அடங்கிய தொகுப்பு நூலையும் வெளியிட்டது. பாரதி காலத்தில் வெளியான இறுதிநூல் இதுவேயாகும்.

இவைதவிர, பிற படைப்புகள் அவரது மறைவுக்குப் பிறகே வெளியிடப்பட்டன. பத்திரிகைகளில் எழுதப்பட்ட கட்டுரைகள் தொகுக்கப்பட்டு பல பதிப்புகள் இதுவரை வெளியாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளும், மறுபதிப்புகளுமாக பாரதியின் எழுத்துகள் தொகுக்கப்பட்டும், பதிப்பிக்கப்பட்டும் வெளிவந்து கொண்டேயிருக்கின்றன.

இதன்பிறகே பாரதி எழுத்துக்களின் நம்பகத்தன்மை, பிழையற்ற தரமான பதிப்பு தொடர்பான விழிப்புணர்வு ஏற்படத் தொடங்கியது எனலாம்.

பல்வேறு பத்திரிகைகளில் சிதறிக் கிடந்த பாரதியின் எழுத்துகள் பலவும் இன்றளவும் பலரின் முயற்சியால் தேடிக் தொகுக்கப்பட்டும், பதிப்பிக்கப்பட்டும் வருகின்றன.

பலரும் பாரதி நூல் பதிப்புப் பணியில் ஈடுபடுவது, வணிக நோக்கிலான பதிப்புகள் பெருகிவருவது எனப் பலகாரணங்கள் பாரதிநூல் பதிப்புகளில் சிக்கல்களை ஏற்படுத்தியுள்ளன.

பாரதி காலத்தில் பதிப்பிக்கப்பட்ட நூல்கள், அவரது மறைவிற்குப் பின்னர் அரசுடைமையாகும்வரை பதிப்பிக்கப்பட்ட நூல்கள், அரசுடமையான பிறகு தனிநபர்களால் மேற்கொள்ளப்பட்ட பதிப்பு முயற்சிகள் என மூன்று கட்டமாகப் பிரித்து இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. நூல்களாக வெளிவந்துள்ள உரைநடை ஆக்கங்கள் மட்டுமே ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. உரைநடை படைப்புகளின் சமூக அரசியல் பின்புலமும் ஆராயப்படவுள்ளது.

பாரதியாரின் உரைநடைநூல் பதிப்புகளில் காணப்படும் சிக்கல்களை ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும். இந்நோக்கம் பின்வரும் குறிக்கோள்களை உள்ளடக்கியது.

1. பாரதி நூல்கள் பதிப்பிக்கப்பட்டதன் நோக்கம், காலச் சூழல் இவற்றை அறிதல்.
2. பதிப்புகளில் காணப்படும் நிறை, குறைகளை அறிதல்.
3. உரைநடைப் பதிப்புகளில் தனிநபர்களின் முயற்சிகளை அளவிடுதல்.

## ஆய்வு நெறிமுறை

இந்த ஆய்வேட்டினை எழுதுவதற்கு வரலாற்றியல் முறையும் விளக்கவியல் முறையும் பின்பற்றப்பட்டுள்ளது.

## ஆய்வின் வரையறை

பாரதி வாழ்ந்த காலம் தொடங்கி 2005ஆம் ஆண்டு வரை பதிப்பிக்கப்பட்டுள்ள அவரது உரைநடை நூல்கள் அனைத்தும் இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு மூலங்கள்

நூல்களாக வெளிவந்துள்ள பாரதியின் உரைநடைப் படைப்புகள் முதன்மை ஆய்வு மூலங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மேலும் பாரதி பற்றியும் அவரது படைப்புகள் குறித்தும் வெளிவந்துள்ள திறனாய்வு நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் ஆய்வுக்குத் துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## இயல் பகுப்புமுறை

'பாரதி உரைநடை: பதிப்பு வரலாறு' என்ற தலைப்பில் செய்யப்படும் இவ்வாய்வேடு மொத்தம் ஆறு இயல்களைக் கெண்டது. அவை வருமாறு:

1. முன்னுரை
2. தமிழில் பதிப்புச் சிந்தனைகள்
3. பாரதி வாழ்ந்த காலத்தில் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் 1921 வரை
4. பாரதியின் மறைவு முதல் அரசுடைமையாகும் வரை பதிப்பிக்கப்பட்ட நூல்கள் 1922 முதல் 1949 வரை
5. அரசாங்க வெளியீடு மற்றும் தனிநபர்களின் பதிப்புகள் 1950 முதல் 2005 வரை
6. தொகுப்புரை

வெளியிடுதல் (Publishing) பதிப்பித்தல் (Editing) என்ற சொற்கள் குறிக்கும் இரண்டு செயல்பாடுகளுமே தமிழில் பதிப்பித்தல் என்றே சுட்டப்படுகிறது. ஆரம்ப காலத்தில் நூல்களை வெளியிட்டு விற்பனை செய்வதற்கென்று தனியே பதிப்பகங்களோ விற்பனை நிலையங்களோ ஏற்படவில்லை. இப்பணியினை அச்சகங்களே பெரும்பாலும் செய்து வந்தன. அன்றைய அச்சிடுபவரே இன்றைய பதிப்பாளர். பதிப்பாசிரியரின் பணி வேறு வகையானது. அச்சுப்பொறியின் வருகையிலிருந்து படிப்படியாக அச்சடித்தல், வெளியிடுதல், பதிப்பித்தல் எனத் தமிழில் நிகழ்ந்த மாறுதல்கள் இரண்டாம் இயலில் ஆராயப்பட்டுள்ளது.

மூன்றாவது இயலில் பாரதி வாழ்ந்த காலத்தில் பதிப்பிக்கப்பட்ட உரைநடை நூல்கள் ஆராயப்பட்டுள்ளன. பாரதி வாழ்ந்த காலத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ள மொத்த நூல்கள் 22. இவற்றுள் உரைநடை நூல்கள் 12 ஆகும். 1907இல் 'புதிய கட்சியின் கொள்கைகள்' என்ற நூலில் தொடங்கி 1920இல் 'கதாமாலிகா' வரை இடம்பெற்றுள்ள நூல்கள் ஆராயப்பட்டுள்ளன.

பாரதி மறைவுக்குப் பின் செல்லம்மாள் பாரதியும், அவரைத் தொடர்ந்து பாரதியின் தம்பி சி.விசுவநாதனும் நூல் வெளியீட்டு முயற்சிகளை மேற்கொண்டனர். 1949இல் பாரதி நூல்கள் அரசுடைமையாகும் வரையில் மிகுந்த சிரமத்துக்கிடையில் பாரதியின் தம்பி புத்தகங்களை வெளியிட்டார். கையெழுத்துப் படியாக இருந்த பல படைப்புகள் இக்காலகட்டத்தில் வெளியாகின. இவை குறித்து நான்காவது இயலில் ஆராயப்பட்டுள்ளது.

ஐந்தாவது இயலில் அரசாங்க வெளியீடு மற்றும் தனிநபர்களின் பதிப்பு முயற்சிகள் பற்றி ஆராயப்பட்டுள்ளது. முறையான பாரதி வாழ்க்கை

வரலாறு எதுவும் இல்லாத நிலையும் அவரது எழுத்துக்கள் எவை எவை என்பது கண்டறியப்படாத நிலையுமே வெகுகாலம் வரை நீடித்திருந்தது. பாரதி ஆய்வாளர்கள் பெ. தூரன், ரா. அ. பத்மநாபன், சீனி. விசுவநாதன், இளசை.மணியன் முதலியோர் செய்த முயற்சியே பாரதியின் கண்டறியப் படாத பல படைப்புகளை வெளிப்படுத்தியது. இத்தகைய பதிப்பு முயற்சிகள் இவ்வியலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

ஆறாம் இயலான தொகுப்புரையில் இந்த ஆய்வின் முந்தைய இயல்களில் கூறப்பட்ட கருத்துக்களைச் சுருக்கமாகத் தொகுத்துரைத்து அதன் பயனாகப் பெறப்படும் முடிவுகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இப்பொருளில் மேலாய்வு செய்வதற்குரிய ஆலோசனைகளும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

இயலின் இறுதியில் இவ் ஆய்விற்கு பயன்பட்ட பதிப்புகள், நூல்கள் யாவும் ஆசிரியர் அகரவரிசையில் துணைநூற்பட்டியலாக இணைக்கப் பட்டுள்ளது.